SRI A. VEDARATHNAM: இந்த கல்விச் சீரமைப்புக்குக் கொடுக்கப்படும் பொருள்களெல்லாம் பற்றி சரியான கணக்கு வைக்கப்படுகிறதா? அப்படி வைக்கப்படும் கணக்குகளின் நகல்கள் சர்க்காரிடம் உள்ளனவா?

THE HON. SRI C. SUBRAMANIAM: இது ஒவ்வொரு பள்ளி சீரமைப்பு மகா நாட்டின் போதும் அச்சடித்து கொடுக்கப்படுகிறது. அது சம்மந்தமாக ஒவ்வொரு பள்ளிக்கும் அந்தப் பொறுப்பு கொடுக்கப்படுகிறது. இது சர்க்காருடைய பணமோ அல்லது திட்டமோ அல்ல. ஆங்காங்கே இருக்கக்கூடிய பள்ளி அதிகாரிகள், கமிட்டிகள் பரிசீலனை செய்கிறார்கள்.

SRI M. P. SARATHI: இந்த கல்விச் சீரமைப்பிற்காக வசூலிக்கப்படும் பொருள்களையும், பணத்தையும், சர்க்காரே விநியோகிக்கிறார்களா அல்லது அந்தந்தப் பள்ளிகளுக்கே விட்டுவிடுகிறார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM: அதுதான் சொன்னேன்; அந்தந்தப் பள்ளிகளுக்கே விட்டுவிடப்படுகிறது.

SRI V. SUBBIAH: இந்த கல்விச் சீரமைப்பு மாநாடுகளைச் சிறப்பாக நடத்த என்று ஆங்காங்கே இருக்கும் கமிஷன் கடைகளிலிருந்து அரிசி, பருப்பு முதலிய பண்டங்களைக் கொண்டுவந்து வைத்து, பிறகு எடுத்துப் போகிறார்களே. அதெல்லாம் கணக்கில் வருகிறதா? அம்மாதிரி நிகழ்ச்சிகள் பல மாநாடுகளில் நடந்திருக்கிறதே.

THE HON. SRI C. SUBRAMANIAM: சில இடங்களில் அம்மாதிரிப் புகார்கள் வந்தன, ஆனால் பரிசீலனை செய்ததில், அது உண்மையல்ல, இந்த இயக்கத்தில் பொறாமை கொண்டவர்கள் சொன்ன வெறும் புகார்கள் என்ற முடிவுக்குத்தான் வர முடிந்தது.

*Fish*

MR. SPEAKER: I think Questions 584 and 585 relate to the same subject and may be taken up together.

*584 *Q.*—SRI A. VEDARATHNAM: கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்னை கடலில் விஷ மீன்கள் இருப்பதாக கூறப்படுவதன் விவரமென்ன?

(இ) இதுவரை அவைகளால் ஏற்பட்ட தொந்திரவு என்ன?

(உ) இந்த விஷ மீன்களிடமிருந்து மீனவர்களையும், கடலில் ஸ்நானம் செய்வோரையும் காப்பாற்ற அரசாங்கம் என்ன முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறது?

(எ) இதுவரை இந்த விஷ மீன்களால் ஏற்பட்ட சேதம் எப்படி தவிர்க்கப்பட்டது?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: (*a*) to (*d*) The presence of a variety of jelly fish, whose sting causes swelling, was reported near the sea coast off Madras during October 1960.

4th March 1961]

Presumably this has been mistaken as a poisonous fish. The Government are not so far aware of any specific instances where any casualty was reported to have been caused by this jelly fish off Madras coast. However, wide publicity was given by the Government through leading local dailies of Madras, regarding the reported occurrence of jelly fish and the fishermen were warned against coming into contact with this jelly fish. During the last three months, the occurrence of stinging jelly fish has been brought to the notice of the State Fisheries Department only once. The occurrence of this variety of jelly fish is rare and there is no cause for alarm.

SRI A. VEDARATHNAM: *இவ்வளவு காலமும் இல்லாமல் இருந்து திடீரென்று இந்த மாதிரி விஷ மீன்கள் எப்படி வந்தன; இம்மாதிரிக் கிளர்ச்சிக்கு காரணம் என்ன? அந்த விஷ மீன்கள் இப்பொழுது என்ன நிலையில் இருக்கின்றன?*

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: *இந்த வகையான மீன்கள் எப்படி வந்தன என்று சொல்வதற்கில்லை. இதனால் அபாயம் இல்லை; சொரி போன்றவை ஏற்படுகிறது. இவை எப்பொழுதும் காணப்படுவதும் இல்லை.*

*585 Q.—SRI M. P. SARATHI: *கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) 1958-59, 1959-60 ஆண்டுகளில் முறையே இந்த ராஜ்யத்தில் பிடிக்கப்பட்ட மீன்களின் அளவு என்ன?*

*(இ) வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது எவ்வளவு? அவைகளின் விலை மதிப்பு எவ்வளவு?*

*(உ) வெளி ராஜ்யங்களுக்கு ஏற்றுமதி செய்யப்பட்ட மீன்களின் அளவும், நிதி மதிப்பும் எவ்வளவு?*

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: (a), (b) & (c) The particulars (a) are placed on the table of the House.

SRI M. P. SARATHI: *1958-59-ல் ஏற்றுமதி செய்வதைவிட 1959-60-ல் ஏறக்குறைய 100 லட்ச ரூபாய்கள் குறைந்திருக்கிறது. ஏற்றுமதி செய்ய சர்க்காரால் முடியவில்லையா? ஏன்?*

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: *எவ்வளவு மீன்கள் தேவைப்படுகிறதோ அவ்வளவுதான் ஏற்றுமதி செய்ய முடியும். மேலும் நம் நாட்டில் மீனுக்கு கிராக்கி அதிகமாக இருக்கிறது.*

*Council of Scientific and Industrial Research*

*586 Q.—SRI K. SATTANATHA KARAYALAR: Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) the schemes for which assistance is received from the Council of Scientific and Industrial Research; and

(b) the nature of the assistance received?

---

(a) Printed as Appendix IV on page 313 infra.